4th November 1958]

SRI K. VINAYAKAM : பிற்பட்ட இனத்தைச் சேர்ந்த மாணவர்கள் மத்திய சர்க்காரிடத்தில் சலுகைக் கேட்டால் மாகாண சர்க்காருக்கும் மனுப்போடக்கூடாது என்று தடுப்பதால் மத்திய சர்க்காரிடத்திலிருந்து சலுகை வராவிட்டால் மாகாண சர்க்காரிடத்திலிருந்தும் உதவிபெற முடியாமல் தவிக்கிறார்கள் என்பது அமைச்சர் அவர்களுக்குத்தெரியமா ? 9-40 a.m.

THE HON. SRI P. KAKKAN : ஸ்காலர்ஷிப் வேண்டுமென்கிற மாணவர்கள் மத்திய சர்க்காருக்கும் மாகாண சர்க்காருக்கும் தான் அப்ளை பண்ணவேண்டும். மத்திய சர்க்கார் அவர்களது மனுவை ரின்யூவல் பண்ணுவிட்டால் மாகாண சர்க்கார் அவர்களுக்கு உதவி செய்ய ஏற்பாடு செய்துவிடுகிறது.

*Rebate in respect of handloom cloth*

* 840 *Q.*—SRI A. MARIAPPAN : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) கைத்தறி ஜவுளிகளுக்கு 12 நயா பைசா கொடுத்து வந்த ரிபேட் தொகையை 6 நயா பைசாவாக குறைக்கப்பட்டிருப்பது சர்க்கார் அறியுமா ?

(ஆ) தெரிந்ததிருந்தால் மீண்டும் 12 நயா பைசாவாக கொடுக்க என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) & (*b*) The duration of the special additional rebate announced in April 1958 expired on 31st August 1958. The Government of India have since restored the special additional rebate for the period from 1st October to 15th November 1958 (both days inclusive). Representations have also been made to the Government of India for allowing the special additional rebate during other festival seasons in the year up to a total period of four months.

SRI S. M. ANNAMALAI : இந்தப் 12 நயா பைசா ரிபேட் நவம்பர் மாதம் 15-ம் தேதியோடு முடிவடைகிறது. மேலும் தொடர்ந்து கொடுக்க இந்த சர்க்கார் ஏதாவது நடவடிக்கை எடுத்துக்கொண்டு வருகிறதா ?

THE HON. SRI V. RAMAIAH : சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டு இருக்கிறது என்பதைப் பற்றித்தான் என்னுடைய பதிலில் படித்தேன். இந்த மாதிரி ஸ்பெஷல் ரிபேட்டை இதர பண்டிகை காலங்களில் வருஷத்தில் நான்கு மாதங்கள் வரைக்கும் அனுமதிக்க மத்திய சர்க்காரிடம் கேட்டுக்கொண்டிருக்கிறோம்.

SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM : தலைவர் அவர்களே, கூட்டுறவு சங்கங்களில் சேராத நெசவாளிகளையும் இந்த செஸ் நிதியிலிருந்து ரிபேட் மூலமாக அல்லது வேறு எந்த முறையின் மூலமாகவோ உதவி செய்வதற்கு சர்க்காருக்கு ஏதாவது உத்தேசமுண்டா ?

THE HON. SRI V. RAMAIAH : தனி கேள்வி வேண்டும்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM ; Sir, I may answer question 842 also.

MR. SPEAKER : கேள்வி 841, 842 இரண்டுக்கும் பதில் அளிக்கலாம்.

*Death of Government servants on duty during the Presidential tour*

* 841 *Q.*—SRI M. P. SARATHI and SRI C. MUTHIAH : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) ஆகஸ்டு மாதம் ஜனாதிபதி அவர்கள் இந்த ராஜ்யத்திற்கு விஜயம் செய்கையில் ரயில்வே லயனில் பந்தோபஸ்துக்காக நின்ற ஊழியர்கள் யாரேனும் விபத்துக்குள்ளாயினரா ?

(ஆ) எந்த இடங்களில், எவ்வளவு பேர் ?

(இ) உயிர் சேதம் உண்டா ?

THE HON. SRI **M. BHAKTAVATSALAM:**

(*a*) Yes, Sir.

(*b*) & (*c*) One Police constable was killed between mile 100/9–10 near Villupuram Station.

* **842 SRI A. GOVINDASAMY and SRI C. MUTHIAH:** கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) அண்மையில் நமது ஜனாதிபதி அவர்கள் தமிழ் நாட்டில் ரயில் சுற்றுப் பிரயாணம் செய்த சமயம் காவலுக்கு நிறுத்தப்பட்டிருந்த சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் எத்தனை பேர்கள் ஆபத்துக்குள்ளாகி உயிர் இழந்தார்கள் ?

(ஆ) இவர்களில் மத்திய சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் எத்தனை பேர்கள் சென்னை, ராஜ்ய உத்தியோகஸ்தர்கள் எத்தனை பேர்கள் ?

(இ) சென்னை ராஜ்ய உத்தியோகஸ்தர் குடும்பத்திற்கு ஏதாவது நஷ்ட ஈடு கொடுக்கப்பட்டதா ?

(ஈ) அப்படியானால் தொகை எவ்வளவு ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) & (*b*) One Police constable of the State Government was killed between mile 100/9–10 near Villupuram station.

(*c*) & (*d*) The question of granting gratuity to the members of the bereaved family is under consideration.

**SRI A. GOVINDASAMY:** எத்தனை பேர் அதில் படுகாயம் அடைந்திருக்கிறார்கள் ? அவர்கள் எல்லோருக்கும் நிவாரணம் அளிக்க அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM:** இந்த விபத்தைப் பற்றி நான் கொஞ்சம் விபரம் சொல்ல வேண்டும். இந்தக் குறிப்பிட்ட கான்ஸ்டேபிள் ரயில்வே லைன் காவலுக்காக நியமிக்கப்பட்டிருந்தவர். இவர் லைனில் படுத்துக்கொண்டு தூங்கி விட்டார். 11–20-க்கு ஒரு ரயில் வந்தது. ரயில் வருவதை உணர்ந்தவுடன் தலையைத் தூக்கினார். தலையில் அடிபட்டு விழுந்து விட்டார்.

**SRI C. MUTHIAH:** ஆர்ம்டு ரிசர்வ் போலீசைக் காபந்துக்காகப் போட்டார்களா ? கிராமவெட்டி தலையாரிகளை காபந்துக்காகப் போட்டார்களா ? வெட்டி தலையாரிகளில் யாராவது உயிரை இழந்தார்களா ? அப்படி உயிர் இழந்திருந்தால் அவர்கள் குடும்பங்களுக்கு உதவி அளிக்கப்பட்டதா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM:** அதைப் பற்றி தனியாகக் கேள்வி போடவேண்டும். ஆர்ம்டு போலீஸ் காவலில் இருந்தாலும், தலையாரி இருந்தாலும் ஆபத்து ஒரே மாதிரிதான்.

*Manufacture of agricultural implements*

* 843 *Q.*—SRI S. LAZAR: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether any industry for the manufacture of agricultural implements has been started in Tiruchirappalli district;

(*b*) the date when the same will go into production; and

(*c*) the details about this Small Scale Industry?